R S Solomon

VOL. XLVI. APRIL 1909. No. 4.

# அருணோதயம்.

# ARUNODAYAM,

THE

## TRANQUEBAR MISSION JOURNAL.

நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம் உன்னண்டை வருகிறது. எசாயா 60, 1.

Tranq R. S. Solomon

### பொருள் அட்டவணை.



PRINTED AT THE EV. LUTH. MISSION PRESS,
TRANQUEBAR.
1909.

## மரண அறிக்கைகள்.

கர்த்தர் எனக்குத் தயவாய்த் தந்திருந்த என் பிரிய மனைவியும், யா: தேவநேசன் உபதேசியாரின் சிரேஷ்ட புத்திரியுமான அமிர்தம் எஸ்தர் அம்மாள் கடந்த 1905 – ம் ஷு ஜூன் மீ 7 – ம் உ முதல் என் வாழ்க்கைக்குக் கர்த்தரால் இணைக்கப்பட்டு நாளது உ வரையில் வேதவாசிப்பு, தியானம் தனிஜெபம், முதலிய விஷயங்களில் வளர்ந்து தேறி, தன்னிடம்வரும் அஞ்ஞானிகளுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் "இயேசு கிறிஸ்து மெய்த்தேவனென்று" ரூபித்துக் காட்டிப் பல புத்திமதிகள் சொல்லிவரும்போது தன் பிரசவத்துக்கென்று கிளியனூரிலிருக்கும் தன் பெற்றோரிடம் போகக் கேட்டுக்கொண்டு அங்கேயிருக்கும்போது நாளது பெப்ரவரி மீ 14 – ம் உ அசுப்பிலே இசிவு ஜன்னிகண்டு அடுத்தநாள் இரவு 2 மணிக்குக் கர்த்தருடைய திருப்பாதம் சேர 16 – ம் உ செவ்வாய்க்கிழமை கிளியனூரிலுள்ள நமது தேவாலயத்தில் கனம் ஒப்மன் ஐயரவர்கள் யோவான் 11, 9 - 27 வசனங்களை வாசித்து சமயோசிதமாய்ப் புத்திமதிகள் கூறி அடக்க ஆராதனையின் முந்தினபாகத்தை முடிக்க, பிந்தினபாகம் கனம் R. சாமுவேல் உபதேசியாரால் நடத்தப்பெற்று சகல கிறிஸ்தவ மரியாதைகளோடும் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது: 20.

கிருபையுள்ள தேற்றரவாளனே மனைவியை இழந்த என்னையும், பிள்ளையை இழந்த பெற்றோரையும், உடன்பிறந்தார் சுற்றத்தார் சிநேகிதரையும், தமது பரம சமாதானத்தாலும், ஆறுதலாலும் சந்தித்துக் காப்பாராக.

"என் வாயைத் திறவாமல் மௌனமாயிருக்கிறேன், ஏனெனில் கர்த்தராகிய தேவரீரே அதைச் செய்தீர்"

கிளியனூர், 18 — 2 — 1909. } சா. ச. சாமிபிள்ளை, லூத்தரன் மிசியோன், மப்பேடு.

---

என் அருமைக் குழந்தை நக்ஷத்திரம் ஞானக்கண்மணி எலிசபேத்து பாண்டூருக்கடுத்த திருப்பேர் என்னும் கிராமத்தில் சிலநாள் வியாதியாயிருந்து கடந்த ஜனவரி மீ 31-ம் தேதி பகல் 1 மணிக்கு மரித்து அன்று சாயந்தரம் 5 மணிக்கு நல்லடக்கம் செய்யப்பட்டது. பிள்ளையின் வயது 3 வருஷம் 3 மீ 3 நாள்.

இரையாமங்கலம், ஸ்ரீபெரும்பூதூர். } தேவ இரக்கம் உபா.


# அருணோதயம்.

தரங்கன்பாடி

மிசியோன் பத்திரிகை.

No. 4. ஏப்பிரில். 1909.


## இயேசுவினிடம் வா.

### 13. வா, அவர் தட்டிக்கொண்டே நிற்கிறார்.

"இதோ வாசற்படியினின்று தட்டுகிறேன், ஒருவன் நம்முடைய சத்தங்கேட்டு, கதவைத்திறந்தால் அவனண்டைக்கு நாம் உட்பிரவேசித்து, அவனோடே இராப்போசனம்பண்ணுவோம், அவன் நம்மோடும் இராப்போசனம் பண்ணுவான்". அறி. 3, 20.

இவை இரட்சகரின் சொந்த மொழிகள். ஆழ்ந்த கருத்துள்ள அநேக பிரசங்கங்களாலும், பக்தியை யெழுப்பும் பல சன்மார்க்க நூல்களைக் கொண்டும், பிரமிக்கத்தக்க தமது பராமரிப்பின் பலவித நடத்துதல்களாலும், சில சமயங்களில் வியாதியை யனுப்பியும், சாகச் சமீபமாய் வைத்தும், இயேசு உன் இருதயத்தின் வாசற்படியில் நின்று பலமுறை தட்டியிருக்கிறார்.

நீ இம்மட்டும் அவரை ஏற்றுக்கொள்ளாதிருக்கிறாயோ? அவரை இன்னமும் வெளியேதான் நிற்க விட்டிருக்கிறாயோ? இதரரை உள்ளே ஏற்றுக்கொண்டு, அவரை மாத்திரம் அகல வைத்திருக்கிறாயோ? ஆ! அப்படிச் செய்திருக்கிறாயா? சந்தேகமின்றிச் செய்திருக்கிறாய். ஆயினும், இயேசுவைப்போல உனக்கு அவசியமாய் வேண்டியவர் வேறொருவருமில்லையே. இயேசுவைப்போல உனக்காகக் காரியங்களை நடப்பிக்கக்கூடியவர் வேறொருவருமில்லையே. இயேசு உனக்கிருப்பதுபோல் உனக்கிருக்கக் கூடியவரும் வேறொருவருமில்லையே. அவரோ உன்னை இன்னமும் முற்றிலும் கைவிட்டவரல்ல. "அவர் நீடிய சாந்தமும் மகா கிருபையுமுள்ளவர்" அல்லால் உனது மறுதலிப்புகளும் பாவங்களும் அவரை முன்னமேயே உன்னைவிட்டுத் துரத்தியிருக்கும்.

அவர் பொறுமையின் பராபரனுதால், அவர் இன்னமும் தட்டிக்கொண்டிருக்கிறார். இச்சிறு தியானத்தைக்கொண்டும் அவர் இன்னொரு முறை தட்டுகிறார். நீ இதை வாசிக்கையில், "எனக்குக் கதவைத்திற; நான் உட்பிரவேசித்து, உன்னோடு தோழமையாவேன்" என்று அவர் உனக்குச் சொல்லுகிறார்.

இயேசுவானவர் ஒரு இருதயத்தினிடம் வருகையில், அவர் ஒருபோதும் வெறுங்கையராய் வருகிறதேயில்லை. அவர் பூரணமும் இலவசமும் நித்தியமுமான இரட்சிப்பைத் தம்முடன் கொண்டுவருகிறார். தேவபக்தியுள்ள ஜீவியத்துக்கு அவசியமான யாவற்றையும் அவர் கொண்டுவருகிறார்.

ஆகையால் வா, கதவைத்திறந்து இயேசுவை நோக்கிப்பார். நம்மை ஏறிட்டு நோக்குங்கள்; அப்போது இரட்சிக்கப்படுவீர்கள்". "நாம் உனக்கு என்ன தரவேண்டுமென்று கேள்" என்கிறார். நீ கெட்டுப்போவதை அவர் விரும்பாமல், நீ மனந்திரும்பிப் பிழைப்பதையே அவர் விரும்புகிறார். ஆகையால் "உங்களுக்கு இரங்கும்படி கர்த்தர் காத்திருப்பார், உங்கள்மேல் மனதுருகும்படி எழுந்திருப்பார்" என்று எசாயா தீர்க்கதரிசி எழுதுகிறார்.

சத்துருவாகிய சாத்தானின் தலையை நசுக்கி வெற்றிபெற்று ஜெயவேந்தராய் உயிரோடெழுந்த இயேசு உன் இருதயத்தின் வாசற்படியில் நீண்டகாலமாய் நின்று காத்துக்கொண்டிருக்கிறார். அவர் இன்னமும் காத்துக்கொண்டிருக்கிறார். இனி அதிககாலம் ஒருவேளை காத்திரார்.

கடைசி தட்டுதல் ஒன்றிருக்கும். இயேசுவினிடம் வர அழைக்கும் இச்சிறு தியானமே அவர் உபயோகிக்கும் கடைசி எத்தனமாயிராதென்று யார் சொல்லக்கூடும்? அவ்வெத்தனம் இதுவாயிருந்தாலுமிருக்கலாம். ஓ! இதுவாயிருக்குமானால், உடனே வா. அவர் முடிவாய் உன்னை விட்டுப்போய் விடுமுன்னமே இயேசுவினிடம் வா.

"கதவுதட்டுகிற என் நேசரின் சத்தத்தைக்கேட்டேன்; என் சகோதரியே, என் சிநேகிதியே, என் புறாவே, என் உத்தமியே எனக்குத் திற ... என்றார்". உன். 5, 2.

| | |
|---|---|
| "தட்டித் தட்டி நிற்கிறார், | ராஜனாய் விளங்கிறார். |
| காத்துக் கொண்டிருக்கிறார். | மனமே இவ்வன்புணர்ந்து |
| பரதேசி போல வந்தும் | கதவைத் திறக்கப்பார்!" |

C. I. S.



# இரட்சகரின் பாடுகளை வாசிக்கக்கேட்ட யூத சிறு பெண்ணின் குணப்படுதல்.

போலாந்தைச் சேர்ந்த நாடுகள் ஒன்றில், நல்ல குடும்பத்தில் பிறந்த ஒரு யூத பெண் இருந்தது. அது வெகு அமைதலான பிள்ளை. மற்றப்பிள்ளைகளோடு எந்த உல்லாச விளையாட்டிலுஞ் சேராது. இவ்விதமாகப் பதினறு வருஷங்கள் கழிந்துபோயின. ஒரு நாள் தன் தகப்பன் தோட்டத்தில் ஒண்டியாய் உட்கார்ந்திருந்தது. அந்தத் தோட்டத்திற்கும், கிறிஸ்தவ அயலார் தோட்டத்திற்கும் நடுவே ஒரு மரவேலி இருந்தது. வேலியின் அந்தப்பக்கத்தில் அநேக பெண்கள் விளையாடிக்கொண்டிருக்க, அதைக் கவனிக்காமலே இருந்தது. அவர்கள் வெகு சந்துஷ்டியாயிருக்கையில், ஒரு சிநேகிதர் ஓடிவந்து, இதோ, ஒரு நேர்த்தியான புஸ்தகம், என் தகப்பனுர் எனக்கென்று இதைக்கொண்டுவந்தார் என்று கூவ, அந்தச் சத்தம் அதின் காதில் விழுந்தது. அந்தப் புஸ்தகத்தை ஒருவர் ஒருவராய்ப் பார்த்து முடியும்மட்டும் ஒரு சந்தடியும் இல்லை. பிறகு ஒரு சிறுபெண், இதா? இந்தப் புஸ்தகம் எனக்குத் தெரியுமே; இது புதிய ஏற்பாடு; நான் ஒரு பாகத்தை உனக்கு வாசிப்பேன் என்றது.

பிறகு அந்தப்பெண், இரட்சகரின் பாடுகளையும், மரணத்தையும், அடக்கத்தையும் பற்றிச்சொல்லும் யோவான் 19-ம் அதிகாரத்தை வாசித்தது. வேலியின் மறுபக்கத்தில் இருந்த யூத பெண் இவைகளைக்கேட்டுக்கொண்டிருந்தது.

அந்தப் பெண் இயேசு வாரால் அடிக்கப்பட்டதையும், முண்முடி சூட்டப்பட்டதையும் "சிலுவையில் அறையும், சிலுவையில் அறையும்" என்று கூப்பிட்ட யூதருடைய சத்தத்தையும்," "அவனில் ஒரு குற்றமுங் காணேன்" என்று சொன்ன பிலாத்துவின் சாக்ஷியையும், இயேசு பாரச்சிலுவையைச் சுமந்துகொண்டு, கொல்கதாவுக்குப் போனதையும், அங்கே ஆணிகளால் மரத்தில் கடாவப்பட்டு அகோர வேதனைகளைச் சகித்ததையும், அவரது வேதனைகளினூடே மொழிந்த கடைசி வார்த்தைகளையும், "முடிந்தது" என்ற வார்த்தையையும் அவர் தமது தலையைச் சாய்த்து உயிர் விட்டதையும், ஈட்டியால் அவர் சரீரம் குத்தப்பட்டதையும், அவர் விலாவிலிருந்து இரத்தமும் தண்ணீரும் ஓடினதையும், "அதைக் கண்டவன் அதற்குச் சாட்சி கொடுத்தான். அவர் சாட்சி மெய்யாயிருக்கிறது. நீங்கள் விசுவாசிக்கும்படிக்குத் தான் சொல்லுகிறது மெய் என்று அவன் அறிந்திருக்கிறான். இதுகளேவென்றால் வேத எழுத்து நிறைவேறும்படியாகச் சம்பவித்தது" என்கிற யோவானுடைய வார்த்தைகளையுங் கவனமாய்க்கேட்டது. ஒருபோதுங் கேட்டிராத

இந்தவார்த்தைகள் அந்தச் சிறுபெண்ணின் இருதயத்தில் மிகுந்த வேலை செய்தது. புதிய ஏற்பாடு என்கிற புஸ்தகத்தின் பெயரை நன்றாயறிந்துகொண்டு, அதை வாங்கித் தினம் வாசித்து, அதின் ஒவ்வொரு பக்கமும் சிநேகத்தாலும் இரக்கத்தாலும் நிறைந்த ஆண்டவரைப்பற்றிப் பேச, அவரையே தன் ஒன்றான இரட்சகராகவும், வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட மேசியாவாகவும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டது.

பிறகு தன் பெற்றோருக்கு இதைச் சொல்லி, அவர்களும் புதிய ஏற்பாட்டை வாசிக்கவும், கிறிஸ்துமார்க்க விசுவாசத்தை அங்கீகரிக்கவும் கெஞ்சிக்கேட்டுக்கொண்டது. பெற்றோர்கள் ஆச்சரியப்பட்டு, இது நமது பிள்ளையா? என்ன! வாய் திறக்காமலும், கள்ளங்கபடில்லாமலும், பயங்கொள்ளித்தனமாயுமிருந்ததுவா இப்போது இவ்வளவு ஊக்கமாயும், அக்கறையாயும் கிறிஸ்தவர்களின் கடவுளுக்காகப் பரிந்துபேசுகிறது? இது சாத்தியமான விஷயமா? இந்தப்பிள்ளைக்கு எப்படி அந்த எண்ணங்கள் வந்தன என்று பிரமித்து, இனி ஒருபோதும் அதைப்பற்றிப்பேசாதிருக்கவும், அதில் சேர்ந்து கொள்ளுவதாய்ச் சொல்லாதிருக்கவும் கண்டிப்புச் செய்தார்கள்.

அந்தச் சிறுபெண்ணோ மனக்கிலேசத்தோடு தன்னறையிலிருந்துகொண்டு தனக்கருமையிலும் அருமையான அந்தப் புஸ்தகத்தை வாசிப்பதில் மனச்சோர்படையாமல் இருந்தது.

வருஷம் ஒன்று சென்றபின், குடும்பச்சோலியின் அவசரத்தினிமித்தமாய்த் தாயார் வீட்டைவிட்டு வெளியூருக்குப்போக நேரிட்டது. அந்த அம்மாள் திரும்பிவருமுன், தகப்பனாருக்கு வெகு மோசமான வியாதி கண்டது. அந்த அருமைப்பெண் தகப்பனாரின் பக்கத்தில் இராப்பகலாய் உட்கார்ந்து, மெலிந்துபோன அவர் உடம்புக்கு மாத்திரம் போஷாப்புச் செய்யாமல், தன்னாத்துமாவுக்கு வெகு அருமையாயிருந்த இன்ப இரட்சகரைக்குறித்தும், வெகு கரிசனமாயும் பட்சமாயும் அவரோடு பேசினதால், அவரது ஆத்துமாவுக்கும் போஷாப்பைக் கொடுத்துவந்தது. தன் கையில் வைத்திருந்த புதியேற்பாட்டைக் காட்டி, பாவிகளுக்காகப் பாடுபட்டு மரித்த மேசியா இயேசுதான் என்று அவருக்கு ரூபித்து, "என் அருமை அப்பா, அவரை உங்கள் இரட்சகராக ஏற்றுக்கொள்ளுங்கள். உங்கள் மீட்பர் என்று சொல்லுங்கள். கர்த்தர் உங்களை மரணத்தின்வழியாய்த் தம்மண்டை எடுத்துக்கொண்டால், அவர் இருக்கிற அந்த மகிமையுள்ள இடத்திலே நாம் ஒருவரையொருவர் சந்திக்க நேரிடும்" என்று அழுகையோடே சொல்லிற்று. கடைசியாக, சாகுந்தருணத்திலிருந்த யூதனின் கண்கள் திறவுண்டன. உலகத்தின் பாவத்தைச் சுமந்த பராபரனுடைய ஆட்டுக்குட்டியைக் கண்டான். அவரை



நோக்கிக் கூப்பிட்டுப் பாக்கியமாய் அவருக்குள் நித்திரையடைந்தான்.

தன் தகப்பனார் தமது ஜீவியத்தின் பன்னிரண்டாம் மணிவேளைமட்டும் ஆண்டவருடைய நாமத்தை யறியத்தாமதித்தபோதிலும், கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபையில் தன் முழு நம்பிக்கையையும் வைத்து, தன் விசுவாசத்தை யறிக்கையிட்டு, சமாதானமாய்க் கர்த்தருக்குள் மரித்ததைக் கண்ட அந்தச் சிறு பெண்ணுக்கிருந்த ஆனந்தத்துக்கு அளவில்லை.

செத்துப்போன தன் புருஷனிடத்தில் உண்டான மாறுதலையறியாத பெண்சாதி ஊரிலிருந்து திரும்பிவந்தாள். அவன் கிறிஸ்தவனாக மரித்த சங்கதியை அறிந்ததும், அவளுக்குண்டான கோபத்திற்கு மட்டில்லை. அவளும், அவளோடிருந்த மற்ற யூதர்களும் ஏழைப் பெண்ணைப்பிடித்துப் படுத்தாதபாடு படுத்தினார்கள். அவள் மூர்ச்சையாகி விழுந்தாள். அப்படியிருந்தும், தான் வைத்திருந்த புதியேற்பாட்டின் இரட்சிக்குஞ் சத்தியத்திற்கு வெகு உண்மையாயிருந்தாள்.

இருந்தாப்போலிருந்து அந்தப் பெண்ணைக்காணோம். அவள் தாயோ, அந்தப் பெண்ணைப்பிடித்த பைத்தியம் நீங்கும்பொருட்டு, தொலையிலுள்ள சொந்தக்காரர் வீட்டிற்கு அனுப்பியிருக்கிறேன் என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

ஆறு வாரத்திற்குப் பிறகு, அந்தப் பெண் தெருவிலே காணப்பட்டாள். எக்கோலமாய்? துணி அழுக்குங் கிழிசலுமாயிருந்தது. அவள் தலைமயிர் அலங்கோலமாய் முகத்திலுந் தோளிலுங் கிடந்தது. உடம்பு மெலிந்துபோயிற்று. அவள் கைகளிலுங் கால்களிலும் இரத்தம் பீறிட, உதவிக்காகக் கத்திக்கொண்டு தெருக்களில் ஓடினாள். வெகு ஜனங்கள் அவளைச் சூழ்ந்துகொண்டது. இந்தக் காலமெல்லாம் ஒரு நிலவறையில் அடைக்கப்பட்டிருந்தேன் என்று கதறினாள். அவள் தாயார் மூர்க்காவேசங்கொண்டு கொன்றுபோடுவேன் என்று பயங்கரமாய்ச் சண்டையிட, அச்சிறு பெண் போலீஸ் அதிகாரிகளால் தற்காக்கப்பட்டாள். பிறகு போலாந்திலுள்ள உவார்சாவுக்கு அனுப்பப்பட்டு, கிறிஸ்துமார்க்க உபதேசமடைந்து, கிறிஸ்துவைப் பகிரங்கமாய் அறிக்கையிட்டு, ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டாள். எத்தனையோ சாபங்களுந் துன்பங்களும் அவள் சொந்தக்காரரால் உண்டானபோதும், உண்மையுள்ள பராபரனுடைய கிருபையால், எல்லாப் பாவிகளின் இரட்சகராகிய இயேசுவை வெகு உண்மையாய் விசுவாசித்தாள்.

L. P.

1908-ம் ஹூ முடிவில் நமது மிசியோன் சபைகளின் பொக்கிஷ நிலைமையைக் காட்டுங் கணக்கு.

| நம்பர். | சேகரம். | சபை பொக்கிஷ வரவு. ரூ. | அ. | ப. | ஏழை பொக்கிஷ வரவு. ரூ. | அ. | ப. | பலவிஷயச் சேர்ப்பு. ரூ. | அ. | ப. | சபை பொக்கிஷ கையிருப்பு. ரூ. | அ. | ப. | ஏழை பொக்கிஷ கையிருப்பு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | தரங்கன்பாடி ... ... | 261 | 5 | 7 | 170 | 6 | 11 | 76 | 0 | 7 | 10519 | 9 | 4 | 661 | 13 | 6 |
| 2 | காரைக்கால் ... ... | 5 | 7 | 8 | 10 | 5 | 2 | 6 | 10 | 0 | 211 | 5 | 6 | 0 | 0 | 0 |
| 3 | பிறையாறு ... ... | 209 | 2 | 7 | 131 | 5 | 11 | 61 | 5 | 1 | 9248 | 7 | 3 | 434 | 4 | 0 |
| 4 | மணிக்கிராமம் ... ... | 18 | 3 | 0 | 25 | 6 | 11 | 1 | 3 | 6 | 1964 | 9 | 3 | 526 | 12 | 4 |
| 5 | மாயூரம் ... ... | 140 | 0 | 2 | 226 | 15 | 10 | 72 | 10 | 10 | 3451 | 9 | 7 | 100 | 4 | 8 |
| 6 | மணல்மேடு ... ... | 15 | 10 | 10 | 25 | 10 | 3 | 2 | 3 | 2 | 753 | 9 | 4 | 0 | 0 | 0 |
| 7 | பனம்பள்ளி ... ... | 19 | 14 | 5 | 35 | 9 | 5 | 3 | 0 | 0 | 91 | 12 | 7 | 0 | 0 | 0 |
| 8 | குற்ருலம் ... ... | 14 | 9 | 6 | 24 | 12 | 11 | 0 | 0 | 0 | 435 | 7 | 5 | 0 | 0 | 0 |
| 9 | சீர்காழி ... ... | 106 | 7 | 3 | 77 | 0 | 0 | 20 | 4 | 11 | 2747 | 4 | 6 | 0 | 0 | 0 |
| 10 | கும்பகோணம் ... ... | 23 | 3 | 0 | 38 | 8 | 8 | 6 | 0 | 0 | 703 | 3 | 9 | 0 | 0 | 0 |
| 11 | நாகபட்டணம் ... ... | 201 | 4 | 2 | 100 | 8 | 2 | 8 | 3 | 7 | 9966 | 12 | 4 | 32 | 15 | 6 |
| 12 | தஞ்சாவூர் ... ... | 239 | 15 | 8 | 197 | 6 | 0 | 67 | 14 | 2 | 9225 | 11 | 2 | 0 | 0 | 0 |
| 13 | திருச்சினுப்பள்ளி ... ... | 156 | 5 | 4 | 133 | 13 | 0 | 34 | 8 | 5 | 7825 | 11 | 3 | 291 | 8 | 5 |
| 14 | மேட்டுப்பட்டி ... ... | 123 | 7 | 2 | 27 | 1 | 5 | 0 | 0 | 0 | 3444 | 8 | 11 | 0 | 0 | 0 |
| 15 | திண்டுக்கல் ... ... | 150 | 13 | 3 | 151 | 2 | 4 | 8 | 13 | 10 | 4494 | 10 | 9 | 0 | 0 | 0 |
| 16 | போடிநாய்க்கனூர் ... ... | 68 | 1 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 6 | 1491 | 12 | 3 | 0 | 0 | 0 |
| 17 | கோயமுத்தூர் சபை ... | 205 | 13 | 11 | 139 | 12 | 5 | 39 | 1 | 4 | 11670 | 10 | 11 | 72 | 12 | 9 |
| | ஷை கிராமம் ... | 64 | 1 | 7 | 51 | 4 | 5 | 0 | 0 | 0 | 3874 | 6 | 7 | 0 | 0 | 0 |
| 18 | உடுமலைப்பேட்டை ... | 18 | 14 | 0 | 33 | 14 | 4 | 2 | 0 | 8 | 164 | 2 | 10 | 44 | 7 | 8 |
| 19 | ஈரோடு ... ... | 64 | 2 | 3 | 36 | 11 | 2 | 48 | 12 | 4 | 3418 | 15 | 2 | 0 | 0 | 0 |
| 20 | பெங்களூர் ... ... | 122 | 11 | 3 | 73 | 2 | 3 | 83 | 14 | 1 | 6422 | 3 | 6 | 134 | 12 | 5 |
| 21 | சென்னை, புரசபாக்கம் ... | 529 | 10 | 2 | 322 | 3 | 2 | 121 | 12 | 4 | 14368 | 3 | 9 | 0 | 0 | 0 |
| | ஷை இராயபுரம் ... | 209 | 7 | 0 | 45 | 5 | 3 | 31 | 4 | 6 | 8549 | 15 | 3 | 135 | 10 | 10 |
| 22 | பாண்டேர் ... ... | 49 | 0 | 2 | 128 | 9 | 1 | 46 | 9 | 0 | 528 | 14 | 3 | 112 | 1 | 9 |
| 23 | திருவள்ளூர் ... ... | 28 | 10 | 3 | 26 | 11 | 10 | 2 | 10 | 8 | 107 | 7 | 3 | 0 | 0 | 0 |
| 24 | ஸ்ரீபெரும்பூதூர் ... ... | 36 | 12 | 5 | 27 | 10 | 10 | 2 | 8 | 3 | 210 | 0 | 7 | 0 | 0 | 0 |
| 25 | செங்கற்பட்டு ... ... | 11 | 0 | 3 | 45 | 11 | 3 | 5 | 13 | 5 | 283 | 8 | 0 | 0 | 0 | 0 |
| 26 | விழுப்புரம் ... ... | 13 | 11 | 0 | 47 | 9 | 2 | 7 | 9 | 0 | 484 | 2 | 7 | 0 | 0 | 0 |
| 27 | பண்ணுருட்டி ... ... | 1 | 7 | 8 | 13 | 8 | 3 | 1 | 15 | 4 | 55 | 0 | 3 | 0 | 0 | 0 |
| 28 | கூடலூர் ... ... | 53 | 10 | 4 | 103 | 12 | 8 | 15 | 11 | 0 | 3104 | 14 | 10 | 0 | 0 | 0 |
| 29 | விருத்தாசலம் ... ... | 16 | 11 | 3 | 62 | 2 | 9 | 13 | 3 | 10 | 632 | 8 | 11 | 0 | 0 | 0 |
| 30, 31 | சிதம்பரம், மன்னார்குடி ... ... | 45 | 11 | 9 | 103 | 7 | 10 | 7 | 12 | 5 | 2073 | 10 | 9 | 0 | 0 | 0 |
| 32 | இரங்கூன் ... ... | 645 | 6 | 6 | 32 | 1 | 0 | 257 | 6 | 4 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 33 | பினங்கு ... ... | 1232 | 10 | 5 | 225 | 2 | 2 | 32 | 2 | 4 | 96 | 4 | 10 | 145 | 0 | 3 |
| | மொத்தம் ... | 5103 | 6 | 9 | 2894 | 12 | 9 | 1090 | 1 | 5 | 122621 | 3 | 5 | 2692 | 8 | 1 |
| | சுவீடிஷ் வட்டம். | | | | | | | | | | | | | | | |
| 34 | விருதுபட்டி ... ... | 56 | 8 | 5 | 82 | 14 | 2 | 8 | 6 | 2 | 413 | 9 | 11 | 0 | 0 | 0 |
| 35 | திருச்சுழி ... ... | 7 | 10 | 3 | 22 | 3 | 1 | 2 | 3 | 6 | 12 | 2 | 4 | 0 | 0 | 0 |
| 36 | மதுரை ... ... | 121 | 11 | 3 | 212 | 9 | 1 | 20 | 14 | 8 | 5178 | 6 | 2 | 0 | 0 | 0 |
| 37 | பேரையூர் ... ... | 31 | 9 | 3 | 0 | 0 | 0 | 0 | 3 | 1 | 810 | 5 | 4 | 0 | 0 | 0 |
| 38 | புதுக்கோட்டை I ... | 38 | 9 | 5 | 35 | 13 | 0 | 8 | 4 | 0 | 638 | 8 | 5 | 0 | 0 | 0 |
| | ஷை II ... | 108 | 3 | 9 | 133 | 3 | 0 | 13 | 1 | 5 | 764 | 11 | 1 | 0 | 0 | 0 |
| 39 | அணைக்காடு-பட்டுக்கோ. ... | 138 | 2 | 11 | 81 | 3 | 1 | 7 | 8 | 0 | 5557 | 9 | 9 | 0 | 0 | 0 |
| 40 | கொழும்பு ... ... | 37 | 5 | 9 | 24 | 11 | 0 | 1 | 0 | 0 | 789 | 15 | 2 | 0 | 0 | 0 |
| | | 539 | 13 | 0 | 592 | 8 | 5 | 61 | 8 | 10 | 14165 | 4 | 2 | 0 | 0 | 0 |
| | ஆக மொத்தம் ... | 5643 | 3 | 9 | 3487 | 5 | 2 | 1151 | 10 | 3 | 136786 | 7 | 7 | 2692 | 8 | 1 |

## லுத்தர் சாஸ்திரியார் செய்த பெரிய ஜெபம்.

லுத்தர் சாஸ்திரியார் வொர்ம்ஸ் நகரத்துச் சங்கத்தில் ஆஜராகிறதற்குமுன், உருக்கமான ஜெபத்தின்வழியாய்க் கர்த்தருடைய ஒத்தாசையைத் தேடினர்.

கர்த்தருடைய பணிமுட்டாகிய இவர் செய்த ஜெபத்திற்குச் சமமானது இல்லை என்று சொல்லலாம். வார்த்தைகளின் சோடனையில் அல்ல, விட்டுவிட்டுசெய்த சுருக்க விண்ணப்பங்களில் புனையப்பட்ட அவரது ஜெபம் உன்னதத்திற்கேறிற்று. அதை வாசிக்க யாவரும் பிரியப்படுவாராகையால், அச்செபம் வருமாறு:

“சர்வ வல்ல நித்திய பராபரனே! இந்த உலகத்தின் பயங்கரத்தைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. இதோ! என்னைத் தன்வாயில் போட்டுக்கொள்ள இந்த உலகந் தன் வாயைத் திறந்திருக்கிறது. உம்மிலுள்ள என் நம்பிக்கையோ சிறு திரணமாயிருக்கிறது! மாமிசம் வெகு பலவீனம், சாத்தானே மகாபலசாலி! இந்த உலகத்தில் மாத்திரம் என் நம்பிக்கையையெல்லாம் வைப்பேனுகில், இதோ தொலைந்தேன்! என்னுயுசின் கடைசிநேரம் வந்துவிட்டது, எனக்கு ஆக்கினைத் தீர்ப்பு இட்டாயிற்று! கர்த்தாவே! கர்த்தாவே! கர்த்தாவே! இந்த உலக ஞானத்துக்கு எல்லாம் எதிரிடையாக எனக்கு ஒத்தாசை செய்யமாட்டீரா! உதவிபுரியும். நீர் தான் செய்யவேண்டும். — நீர் செய்யத்தான் வேண்டும். — இது என் சுய வேலை அல்ல. இந்த வேலை உம்முடையது. நான் இங்கே செய்யவேண்டியது ஒன்றுமில்லை. இந்த லோகாதிபதிகளோடு மல்லாடிப் போர்புரிய வேண்டிய நிமித்தமும் எனக்கில்லை! என் நாட்கள் சமாதானமாயும் பாக்கியமாயுங் கழிந்து போகவேண்டுமென்பது தான் என்னுசை. இந்தக்காரியம் உம்முடையதே - இந்தக்காரியம் நியாயமானது. இந்தக்காரியம் நித்தியமானது, கர்த்தாவே! உதவிபுரியும்! உண்மையுள்ளவரே! மாருதவரே! எந்த மனிதன்மேல் என் நம்பிக்கையைவைப்பேன்? மனித நம்பிக்கை அவத்தம். மனுஷீகம் நிச்சயமும் நிலைவரமுமற்றது. மனிதனுல் ஆகிறதெல்லாந் தோற்பே தவிர கெலிப்பல்ல:—பராபரனே! என் பராபரனே! என் கூப்பிடுதலின் சத்தத்திற்குச் செவி சாய்க்க மனதில்லையா? என் பராபரனே! நீர் செத்தாபோனீர்? இல்லையே! நீர் சாகமாட்டீரே! நீர் உம்மை ஒளித்துக்கொண்டு மாத்திரமிருக்கிறீர்! நீர் என்னை இந்த வேலைக்கென்று தெரிந்தெடுத்திருக்கிறீரென்பது எனக்கு நன்ருய்த் தெரியுமே! — ஆதலால், என் பராபரனே! எழுந்து வந்து நடபடிக்கை நடத்தும். — என் உயர்ந்த அடைக்கலமும் ஒதுக்கும், என் கேடயமும், என் குன்றுமாயிருக்கிற நேசிக்கப்பட்ட



உமது ஒன்றுன குமாரனுயிருக்கிற இயேசு கிறிஸ்துவினிமித்தம் என் பக்கத்துணையாய் வந்து நில்லும். (கொஞ்சநேரம் அமைதலாய் மனத்தியானம் பண்ணி மறுபடியும் செபிக்கிருர்.)

கர்த்தாவே! எங்கே தங்கியிருக்கிறீர்? என் பராபரனே! எங்கே இருக்கிறீர்? வாரும்! வாரும்! நான் பின்வாங்காமல் சாதுவான ஓர் ஆட்டுக்குட்டியைப்போல் உம்முடைய சத்தியத்திற்கென்று என்னுயிரைக் கொடுக்க இதோ தயாராயிருக்கிறேன். இது நீதி நியாயமான விஷயம். — இது உம்முடைய காரியம். இப்போதும் எப்போதும் உம்மை விட்டுவிட்டு ஒண்டியாயப் போகேன்!

உலக முழுவதும் பிசாசுக்களால் நிறையப்பட்டாலும் — உம்முடைய கைவேலையாகிய என்னுடைய சரீரம் கொல்லப்பட்டு வொர்ம்ஸ் நகரத்தில் கிடத்தப்பட்டாலும், என்னுடலைச் சதை சதையாய்க் கழித்தாலும் — அதைச் சாம்பலாய்ச் சுட்டெரித்தாலும் - என் ஆத்துமா உம்முடையதே. - ஆம்! உம்முடைய வசனந்தான் அதற்கு என் ஆதாரம், என் ஆத்துமா உமக்குச் சொந்தம். அது உம்மிடத்திலே எப்போதுந் தங்கித் தரிப்பதாக. — ஆமேன்!

கர்த்தாவே! நீர்தான் எனக்குத் துணை! ஆமேன்!” என் பதே.

L. P.

---

## நன்மை செய்யும் வகை.

“நன்மை செய்யவேண்டுமென்குதல் என்னுடனே இருக்கிறது” என்று பவுல் அப்போஸ்தலன் சொல்லுகிருர்.

நமது ஜீவியமானது மணற்பொடி சேர்ந்தான பெரிய மலைபோல் சிறு சிறு காரியங்கள் கூடி ஆகிறதாயிருக்கிறது. ஒருவன் தன் ஆயுசில் ஒரு பெரிய காரியத்தைச் செய்யச் சமயங் கிடைக்காமல் போகலாம். அற்பம் என்றுலும் அதில் காட்டும் மேன்மையே மேன்மை.

பல துளிகள் கூடியல்லவா பெருவெள்ளமாகிறது? “ஒரு மிக்க அனேக நன்மைகளைச் செய்யவேண்டுமென்றிருக்கிறவன் ஒரு நன்மையுஞ் செய்துகொள்ளமாட்டான்” என்று மகா புத்திசாலியான டாக்டர் ஜோன்ஸ் என்பவர் சொல்லியிருக்கிருர். ஆகையால் ஒரேதடவையில் மிகுதியான நன்மை செய்யக் காத்திராமல், சமயம் நேரிடுவதுபோல அற்ப சொற்ப நன்மைகளையுஞ் செய்யப் பிரயாசைப்படவேண்டும்.

உலகத்திற்கு உபகாரமாக மிகுந்த நன்மைகளைச் செய்ய வேண்டும் என்று விருப்பமுண்டானல், ஒரு சிறு நற்கிரியைக்குப்பின் வேறொரு நற்கிரியையாகச் சின்னக்காரியங்களிலே நன்மை செய்யவேண்டும். இரண்டொரு நல்ல வார்த்தை பேசுகிறதினலாவது, சில நல்ல புஸ்தகங்களை வாசிக்கக் கொடுக்கிறதினலாவது, வாசிக்கத் தெரியாதவர்களுக்கு அவைகளை வாசித்துக் காட்டுகிறதினலாவது, மற்றவர்களுக்கு முன்பாக நன்மாதிரி காண்பிக்கிறதினலாவது நன்மை செய்யலாம்.

ஜான் நியூட்டன், "இவ்வுலகில் இரண்டு குவியல்களைக் காண்கிறேன். ஒன்று மனுஷரது பாக்கியம், மற்றொன்று அவர்களது நிர்ப்பாக்கியம். நிர்ப்பாக்கியக் குவியலிலிருந்து ஒரு இம்மியளவாவது குறைத்து, பாக்கியக் குவியலில் ஒரு இம்மியளவாவது கூட்டுவேனகில், அது அற்பமல்ல; நான் வீட்டுக்குப் போகும் வழியில் ஒரு காசு விழுந்து கிடந்து அதை எடுத்து ஒரு குழந்தைக்குக் கொடுத்து அதின் கண்ணீரைத் துடைத்தால், அதுவும் ஒரு நன்மைதான். பெரிய காரியங்கள் செய்வது மிகுந்த சந்தோஷந்தான். என்றாலும் அப்படிப்பட்ட அற்ப நன்மைகளையும் நான் அசட்டை செய்யேன்" என்று சொல்லியிருக்கிறார்.

ஆதலால் முதலாவது நம்மால் கூடிய சிறு நன்மைகளையுந் திரும்பத் திரும்பச் செய்து, இப்படி நன்மை செய்வதில் அதிகரிக்கலாம். எந்தக் காரியத்தையும், பாரமான வேலைகளையும் செய்து முடிக்க இதுவே வழி. இவ்விதமாக நம்மால் கூடியமட்டும் செய்வோமாக.

அப்போது நாமும் பிறரும் பிரமிக்கத்தக்கதாக ஜீவாந்தத்தில் வெகு திரள் நன்மை நம்மால் உண்டாயிற்றென்று காண்போம். அதினல் இம்மையில் உபகாரிகள் என்கிற பேரையும், மறுமையில் கடவுளால் பெரும்புகழ், பெருவாழ்வையும் பெறுவோம்.

S. S. S.

## I. சில வினக்களுக்கு வேத விடை.

1. உயர்வுக்குரியவர் யார்? தம்மைத் தாழ்த்துபவர். லூக். 14, 11. தன்னைத்தான் உயர்த்துகிறவனெல்லாம் தாழ்த்தப்படுவான். தன்னைத்தான் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான். 1 பேது. 5, 5. எல்லாருமோவென்றால் ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்து, மனத்தாழ்மையை அணிந்துகொள்ளுங்கள். ஏனெனில் அகந்தையுள்ளவர்களோடே பராபரன் எதிர்த்து நின்று தாழ்மையானவர்களுக்கோ கிருபை அளிக்கிறார்.



2. மேன்மைக்குரியவர் யார்? தம்மை ஊழியத்திற்கு உட்படுத்துபவர். மத். 23, 11. 12. உங்களில் பெரியவனானவன் உங்கள் ஊழியக்காரனயிருக்கக் கடவான். தன்னைத்தான் உயர்த்துகிறவனே தாழ்த்தப்படுவான்.

3. பலவான்கள் யார்? தம்மை ஆளுபவர். வாக்கி. 16, 32. பலவானைப் பார்க்க நீண்டசாந்தமுள்ளவனும், ஒரு பட்டணத்தைப் பிடிக்கிறவனைப் பார்க்கத் தன் ஆவியை ஆண்டுகொள்ளுகிறவனும் வாசி.

4. தன் வசமானவர் யார்? மாமிசமும் லோகமும் செய்யத் தூண்டுகிறவைகளைச் செய்யாதவர். யோவான் 8, 32-36 வரையில் வாசித்துப் பார்க்க.

N. Nj.

## II. இளைஞர்க்கேற்ற போதனை.

சர்வ சாஸ்திரசாலை சென்று படிக்கப்போகும் தனது ஒன்றான குமாரனுக்கு எப்போதும் தன்னை ஞாபகப்படுத்திக் கொள்ள ஓர் வர்த்தகன் சொன்ன போதனை.

நீ அதிர்ஷ்டமுள்ளவனும் பாக்கியவானும் ஆக விரும்பினல் எப்போதும்

1. சத்தியமுள்ளவனயிரு. சத்தியம் உன் இதயத்தை விடுதலையாக்கி, தேவனண்டைக்கு உன்னை வழி நடத்தும்.

2. கீழ்ப்படிதலுள்ளவனயிரு. பெற்றோருக்கும் போதனசிரியருக்கும் மேலானவருக்கும் பணிந்து நட. கீழ்ப்படிந்த பிள்ளையே பத்தியுள்ள பிள்ளையாய் இருந்து தேவப்பிரமாணத்தைக் கைக்கொள்ளும். இளந்தைப் பருவத்தில் தம்மை முன்மாதிரியாகக் காட்டின அன்புள்ள இரட்சகரைப் பின்பற்று.

3. புறக்காரியங்களிலும் ஒழுங்குள்ளவனயிரு. இது இருதயத்திலும் நல்லொழுங்கு இருப்பதற்கு அத்தாக்ஷி. ஒழுங்கு வியாபார வேலைக்கு உயிர். ஒழுங்கின்மை விருத்தியடைய முடியாது.

4. சுறுசுறுப்புள்ளவனயிரு. சுறுசுறுப்புள்ள கைகள் போதுமானதைச் சம்பாதிக்கும். சோம்பற் கைகளோ தரித்திரத்தை வருவிக்கும். சுறுசுறுப்பு இருதயத்தை மகிழ்ச்சியாக்கும். சோம்பல் எல்லாத் துர்க்குணங்களுக்கும் தாய்.

என் மகனே! நான் உனக்குச் சொன்ன இந்நான்கு போதனைகளையும் நீ உன் கண்களுக்கு முன் வைத்து, அவைகளுக்கேற்க ஒழுக தேவன் உனக்குச் சத்துவம் அருளுவாராக.

N. Nj.

## III. திறக்கப்பட்ட ஐந்து வாசல்.

1. யோவான் 10, 9. "நானே வாசலாயிருக்கிறேன்." இது இயேசு இரட்சகர் இவ்வுலகின்கண் நடமாடினபோது தம்

மைக் குறித்து வசனித்த திருப் போதனை. இவ்வாசலால் உட்பிரவேசம் செய்பவர் இரட்சிக்கப்பட்டு நன்மேய்ச்சலைக் கண்டுபிடிப்பார். இது பாவாத்துமாக்களுக்கு எவ்வளவு ஆறுதல் தரும் சுகிர்த போதம். முதியோரும் பாலியரும் இளைஞருமாகிய எத்தரத்தாரும் இப்பிரவேசம் பெறக் கூடியவர். சிறுவரைக் குறித்து "பிள்ளைகள் என்னண்டை வருகிறதற்கு இடங்கொடுங்கள். அதுகளைத் தடைபண்ணாதேயுங்கள். அதேனென்றால் பராபரனுடைய இராச்சியம் அப்படிக்கொத்தவர்களுடையதாயிருக்கிறது" என்று சொல்லுவது "நானே வாசலாயிருக்கிறேன்" என்னும் வாக்கால் அவர்களுக்கும் செல்லும்.

2. அபி. 3, 20. "இதோ வாசற்படியிலே நின்று தட்டுகிறேன்" இவ்வாசல் இதயவாசல். இரட்சகர் காத்துக்கொண்டிருக்கின்றார். திறந்தால், அவர் உட்பிரவேசித்து, இருதயத்தைச் சுத்தம் பண்ணுவார். அதில் தங்குவார். பாவம் இதயவாயிலை இயேசுவுக்கடைக்கும். தேவாவியின் துணையால் அவ்வாயில் திறக்கப்படும் பரியந்தம் ஆண்டவர் அதில் தங்கார்.

3. மத். 7, 7. "தட்டுங்கள், அப்போது உங்களுக்குத் திறக்கப்படும்" தேவன் நமது பிதா. நாம் அவரை நோக்கிச்செபிப்பது அவரது வாசலைத் தட்டுகிறதாயிருக்கின்றது. நாம் செபம் செய்து தட்டினால் அவர் கதவைத் திறந்து நம்மைத் தமது இராச்சியத்தில் பிரவேசிக்கச் செய்வார், என்று "தட்டுங்கள் அப்போது திறக்கப்படும்" என்னும் வாக்கினால் வாக்களிக்கின்றார்.

4. 1 கொரி. 16, 9. "பெரிதும் பெலனுமான கதவு எனக்குத் திறக்கப்பட்டது" இங்கே பவுல் அப்போஸ்தலன் நன்மை செய்யத் தான் ஓர் நற்சமயம் பெற்றதைக் குறிக்கின்றார். அப்படியே நன்மை செய்ய எல்லாருக்கும் எவ்விடத்திலும் கதவுகள் திறந்திருக்கின்றன. இதைப்போன்ற நற்சமயங்கள் கட்டளையிடப்படும். அவைகளைத் தப்பவிடாது, தேவன் நன்மை செய்யவும் வேலைகளை நடப்பித்து, நலத்தைப் பிறப்பிப்பது நமது பேரில் விழுந்த கடன்.

5. அபி. 4, 1. "திறக்கப்பட்ட வாசல்" (வாசல் திறக்கப்பட்டது) பரி: யோவான் இதைத் தரிசித்தார். பாவம் மோக்ஷவாசலையடைத்துப் போட்டது. இயேசுவானவர் பாவத்தையகற்றி அவ்வாசலைத் திரும்பத் திறந்தார். அவர்பேரில் விசுவாசிப்பவன் தடையின்றி அதில் உட்பிரவேசிப்பான். அவரைப் பற்றிப்பிடித்து நமது வாழ்நாளைத் துவக்கி, அவரில் முடித்தால் எல்லாம் வாய்க்கும். அவரே எல்லாத்துக்கும் எல்லாமாய் இருக்கிறார். அவர் மூலமாகவும் அவரோடு பொருந்தி நின்றும், நாம் பரிசுத்த தேவனைச் சேர்ந்து அவரோடு வாழலாம். N.° Nj.



## மிசியோன் சமாச்சாரங்கள்.

### க. இரு சகோதரர்.

1884-ம் வருஷம் பெப்ருவரி மீ 3-ம் தேதி குரு அபிஷேகம் பெற்ற இரு சகோதரர் சிலகாலத்துக்கு முன் தங்கள் ஜூபிலியைக் கொண்டாடி பல வாழ்த்துக் கடிதங்களையும் ஞாபக சின்னங்களையும் பெற்றுக்கொண்டார்கள். இவர்களும் இவர்களைப்போன்ற மற்றச் சகோதரரும் தமிழ்ச் சபைக்கு ஆபரணமாயிருக்க அமலன் அருள்புரிவாராக.

இவர்களுடைய சரித்திரத்தைப்பற்றி பெப்ருவரி மீ 3-ம் தேதி Jubilee கொண்டாட்டத்தன்று கேள்விப்பட்டதைப் பின்வருமாறு தெரிவிக்கிறேன். இது மற்றவர்களுக்கும் ஒரு எழுப்புதலைக்கொடுக்கும்.

சென்னை சங். ஞா. தேவசகாயம் ஐயரவர்களுக்கு 58 வயதும், தஞ்சை சங். தே. தாவீதையரவர்களுக்கு 57 வயதுமாம். அக்காலத்து ஐயர்மார் இவர்களை இரட்டைப்பிள்ளைகள் என்று எண்ணி வந்திருக்கிறார்கள், பிறப்பின்படி அல்லாவிட்டாலும் வளர்ப்பின்படி அப்படிப்பட்ட பிள்ளைகள்தான். இவர்கள் இருவரும் காலஞ்சென்ற சங். Staehlin, Schaeffer ஐயர்மார் காலத்தில் Central Boarding School-ல் படித்தவர்கள். இவர்களது போர்டிங் நம்பர் முறையே 28, 29. ஏக காலத்தில் 1866 - ல் திடப்படுத்தப்பட்டவர்கள் 1874-ல் F. A. பரிட்சையில் தேறினவர்கள். சர்க்கார்வேலைகளுக்கு வேண்டிய ஸ்பெஷல் டெஸ்ட் பரிட்சைகளிலும் தேறி வேறுவேலைக்குப்போகப்பார்த்தும், தரங்கையில் ஒன்றும் கிடைக்காததால் சிலகாலம் உபாத்திமைத் தொழில் செய்துகொண்டே B. A. பரிட்சைக்குப் படித்தார்கள். தரங்கையில் இருந்துகொண்டு அவ்விடத்தில் சர்க்கார்வேலைக்குப் பிரயத்தனப்பட்டது ஆச்சரியமே. ஏனென்றால் தரங்கையின் எல்லைகளைச் சுற்று கவனியுங்கள். வடக்கே பட்டணச்சேரி, தெற்கே சந்திரப்பாடி, கிழக்கே வங்காளக்குடா, மேற்கே பிறையார். ஓர் சமயம் இருவரும் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் போலீஸ் வேலைக்கு மனுப்பண்ணிக்கொண்டவர்கள். கர்த்தருடைய சேவகத்தில் எழுதப்பட வேண்டுமென்றிருக்கிற இவர்களுக்கு அவ்வேலை கிடைக்காததும் அவரது ஊழியத்திற்கென்று அழைக்கப்பட்டதும் கர்த்தருடைய கிருபையே. மூத்தவர் தமிழ்வித்துவானயிருக்கப் பிரயத்தனப்படுகையில், இளையவர் தமது குடும்பபாரத்தினிமித்தம் மிசியோனில் இருப்பதையோ அல்லது வேறு வேலைக்குப்போவதையோ தெரிந்துகொள்ள முடியவில்லை. இவர் 1875-ல் தஞ்சைப்பள்ளிக்கூடத்தில் பிரதம உபாத்தியாயராயிருக்கையில் ஓர் சமயம் மன்னார்குடி வெஸ்லி மிஷன் காலேஜி

னும், சேலம் ஜில்லா காலேஜினும் உயர்ந்த சம்பளம் பெறக்கூடிய வராயிருக்கையில் தற்செயலாய்க் கிடைத்த David Livingstone என்பவரின் சரித்திரத்தை வாசித்துத் தன்னை மிசியோன் வேலைக்கென்று ஆயத்தம் பண்ணுவது நலம் என்றெண்ணி, தன் சகோதராகிய ஐயரையும் சரிப்படுத்தி, பல தடைகளையும் மேற்கொண்டு 1880-ல் இருவரும் காலஞ்சென்ற சங். Ihlefeld ஐயரவர்களின் மாணுக்கர்களானார்கள். இவர்கள் அந்த ஐயராலும் தகப்பன் Schwartz ஐயரவர்களாலும் பெற்ற ஆத்தும சரீர நன்மைகள் மிகுதி. இரு சகோதரரும் 1882-ம் வருஷம் முதல் வேலைசெய்யத் துவக்கி 1884 - ம் வருஷம் தகப்பன் Schwartz ஐயரவர்கள் அசௌக்கியமாயிருந்ததினிமித்தம் தங்கள் போதகரால் அபிஷேகிக்கப்பட்டார்கள். அப்போது அவர்களுக்குச் சொல்லப்பட்ட புத்திமதி "ஒருவன் உண்மையுள்ளவனென்று கண்டுபிடிக்கப்படுவதே உக்கிராணக்காரனிடத்தில் தேடப்படும் காரியம்" என்பது. இவர்கள் மாறி மாறி மாயவரம், தஞ்சை, சென்னை, ரங்கூன் முதலிய இடங்களில் ஊழியம் செய்திருக்கிறார்கள். இவர்கள் வேலைசெய்த இடங்களிலிருந்து வந்த வாழ்த்துதல்கள் இவர்களுடைய வேலையின் பலனுக்கு ஓர் அறிகுறியாம். இவர்களது வேலையின் பலாபலன்கள் ஆடுகளின் பிரதான மேய்ப்பர் வெளிப்படும்போது விசதமாகும்.

கர்த்தர் தாமே இவர்களுக்கும், இவர்களுக்குமுன் ஜூபிலி கொண்டாடினவர்களுக்கும், இன்னம் சமீபத்தில் கொண்டாட இருக்கிறவர்களுக்கும் தமது ஆசீர்வாதத்தைத் தந்தருளுவாராக.

G. G.

---

## உ. பாண்டூர் வட்ட சபையின் தற்கால நிலைமையைக் காட்டும் ரிப்போர்ட்டு. (தொடர்ச்சி.)

5. வருமானம். சர்க்காரால் கிடைத்த உபகார வரவு ரூ 673 - 0 - 0. பிள்ளைகளால் கிடைத்த சம்பள வரவு ரூ 49 - 2 - 2.

6. மேய்ப்பபிள்ளைகள். ஆடுமாடுகளுக்கு மேய்ச்சலைக் காண்பிக்கும் கிறிஸ்தவ பிள்ளைகள் தேவ அறிவிலும், சன்மார்க்க நடக்கையிலும் வளரும்படி வாரத்துக்கு ஒரு தடவை கூடிவந்து ஜீவ மேய்ச்சலைக் கண்டுபோக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. புதிதாய்த் துவக்கியிருக்கும் இவ்வேலை ஒழுங்காய் நடந்தேற பிரதான மேய்ப்பர்தாமே துணை செய்வாராக.

7. a. கைத்தொழில்பாடசாலை. இப்பாடசாலை 1906 ஹு ஸ்தாபகமானதென்றாலும் சரியான போதனாசாதனங்கள் இல்லாதிருந்தமையால் சொற்ப காலம் க்ஷீண தசையிலிருந்தது. 1908 ஹு முதல் நாளதுவரையில் அதில் வந்தடையும் பிள்ளைகளைத் தச்சு வேலை, கொல்லுவேலை, பாய்வேலை, பயிர் வேலை இவைகளில் தேற்றிப் புருஷராக்கக்கூடிய சரியான பாடசாலையானது பாண்டூருக்குச் சிலாக்கியமும், எல்லாருக்கும் சந்தோஷமுமாமே.



b. பிள்ளைகள். தற்காலம் அப்பாடசாலையில் வேலை கற்றுக்கொள்ளும் பிள்ளைகள் 15. இவர்கள் எல்லாரும் அதில் நடக்கும் எல்லா வேலைகளையும் கற்றுக்கொள்ளாமல் அவரவர் சக்திக்கேற்றபடி வெவ்வேறுதொழிலைக் கற்றுக்கொள்ளுகிறார்கள்.

| | |
|---|---|
| c. ஆசிரியர். போர்டிங் இன்ஸ்பெக்டர் ... | 1 |
| பாய் வேலைக்கென்று நியமிக்கப்பட்ட உபாத்தியாயர் ... | 1 |
| இந்து ஆசாரி ... ... ... ... ... ... | 1 |
| தோட்டக்காரர் ... ... ... ... ... ... | 3 |

இன்ஸ்பெக்டர் என்று சொல்லப்பட்ட லாசர் சேர்வை ஜமீன் கன்னங்காரனை கிராம முன்சீபாகவும், போர்டிங் தோட்டந் துரவுகளையும் அப்பாடசாலையில் நடந்தேறும் வேலைகளையும் கண்காணித்து, அப்பாடசாலையின் வரவு, செலவு கணக்குகளை மிசியோனுக்கு சர்வ ஜாக்கிரதையாய் ஒப்புவிக்கும் பாத்தியமுடையவராகவும் இருக்கிறபடியால், அவர் நாமத்தைக் குறிப்பிட்டுப் பேச அவசியம் என்று காண்கிறது.

d. வருமானம். கடந்த வருஷம் அப்பாடசாலையில் நடந்த வேலை எல்லாவற்றினாலும் உண்டான வரவு சுமார் ரூ 600 - 0 - 0. காலம் செழித்திருப்பதால் இதைவிட அதிக வருமானம் எடுக்க வேண்டுமென ஷேயார் கூறுகின்றார். மிசியோன் பங்களாத் தோட்டத்தில் கனம் அம்மாளவர்களின் விருப்பப்படி காய் கனிகள் பயிரிட்டுச் சம்பாதித்த வரவு ரூ 30 - 0 - 0.

### III. நிலபல விஷயம்.

நமது மிசியோன் சேகரங்கள் எல்லாவற்றையும் விட இங்கு ரூ 40,000 பெறுமான காணி பூமிகள் அதிகமிருப்பது பெருமையேயாயினும், மழைத்தாழ்ச்சியால் மிசியோனுக்கு நஷ்டம் வருவது விசனமே. கிருபையுள்ள கர்த்தர் கடந்த வருஷத்தில் நல்ல மழையைக் கொடுத்ததாலும், மிசியோன் நிலபலங்களை விசாரிக்கும்படி வைக்கப்பட்ட ஜமீன் குமஸ்தா முருகப்ப ரெட்டியார் எடுத்துக்கொண்ட பிரயாசையாலும் அவ்வருஷத்தில் மிசியோன் செலவழித்த தொகைக்கு மேல் வசூல் செய்யக்கூடியதாயிருந்தது. இவ்வருஷத்திலும் கர்த்தர் நல்ல மழையைக் கொடுத்திருப்பதாலும், சீமையுபகாரிகள் அனுப்பிய காற்றாடி யந்திரம் வேலை செய்துகொண்டு வருவதாலும் முன்னிலும் அதிகமான பலன் கிடைக்குமென்று எதிர்பார்த்திருக்கிறோம். இச்சமயத்

தில் ஷை யந்திரத்தையனுப்பிய சீமை யுபகாரிகளையும் அந்த யந்திரம் காண்போர் கண்ணுக்கலங்காரமாய்ச் சுழன்று தன் வேலையை நடத்தும்படியாக ஆங்கு அதைச் சரியான நிலையில் நிறுத்தினவரும், Madras Tawker & Sons என்ற கம்பெனியில் வேலை செய்கிறவருமான A. Reinhardt துரையவர்களையும் நினைவுகூர்ந்து நன்றிவந்தனம் சொல்லுகிறோம்.

## IV. போது விஷயங்கள்.

1. சிறு வைத்தியசாலை: இவ்வூரிலும் இன்னும் சுற்றுக் கிராமங்களிலுமுள்ள எச்சாதியாரான கிறிஸ்தவர்களும், அக்கியானிகளும் திரள் திரளாய்க் கனம் ஷொமேருஸ் அம்மாள் அவர்களிடம் கூடிவந்து தங்கள் சரீரப் பிணி நீங்க மருந்து வாங்கிச் சாப்பிட்டுப் போவதுமன்றி, அவர்கள் ஆத்ம ரோகம் பரிகரிக்கப்படக் கிறிஸ்துவைப்பற்றிப் புத்திபோதனைகளையும் பெறுவார்கள்.

2. தீவிபத்து. நமது கதிர் கோவிலுக்கு நேர் வடக்கே இரண்டு மைலுக்கப்பாலிருக்கும் வேம்பாக்கம் என்ற சேரியில் திடீரெனத் தீப்பிடித்து 17 வீடுகள் அதிலுள்ள பண்டம்பாடிகளோடு வெந்துபோனது. யாவற்றையும் பறிகொடுத்த அவ்வீட்டார்களின் பரிதாபக் காக்ஷியைக் கண்ணுற்ற கனம் ஷொமேருஸ் ஐயரவர்கள் மனந்தாளாது கலெக்டர் துரையவர்களுக்குச் சிபார்சு கடிதம் எழுதினர். இத்துடன் இச்சங்கதியை Madras Mail, Christian Patriot முதலிய பத்திரிகைகளுக்கு எழுத அதை வாசித்த இரு உபகாரிகள் அனுப்பிய 10 ரூபாயை அவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தார்கள். அன்றியும் பாண்டூர், கைவண்டூர் சேரிகளிலுள்ள சில வீட்டாருக்கும் அவ்வித ஆபத்து நேரிட்ட அக்ஷணமே தமதூழியருடன் ஓடி வேண்டிய பிரயாசையெடுத்துக் கொண்டதுமன்றி, எரிந்துபோன வீடுகள் புதுப்பிக்கப்படக் கொஞ்சம் உதவியையும் செய்தார்கள்.

3. உதவி. கஞ்சிக்குக் காற்றுய்ப் பறந்த ஏழைகள் பலர் வேலைசெய்து பிழைக்கும்படியாக அச்சமயத்தில் பாண்டூரில் துவக்கப்பட்ட கோவில் கட்டடவேலை, கைத்தொழில் பாடசாலையில் நடந்த வேலைகள், காற்றாடி யந்திர அமைப்பு Boarding முதலிய வேலைகளும் மேற்கண்ட கஷ்ட வேலைகளைச் செய்ய முடியாத விருத்தாப்பியர், பெலவீனர், அநாத பிள்ளைகள் முதலியோர் இலகுவில் செய்து பிழைக்கக்கூடிய கனம் ஐயரவர்களால் இடப்பட்ட வேலைகளும் அக்கஷ்ட காலத்தில் கஷ்டப்பட்டவருக்குக் கிடைத்த தேவ ஒத்தாசையாம்.

இந்த ரிப்போர்ட்டு பிரதிஷ்டை தினத்தில் வாசிக்க இருந்தும் நேரமில்லாமையால் இங்கு பிரசுரிக்கலாயிற்று. V. V.

Printed at the Ev. Luth. Mission. Press, Tranquebar, 1909.

## தமிழ் லுத்தரன் சுவய சகாய சங்கம்.

கிறிஸ்தவரில் அநேகர் எளியர்; லுத்தரன் கிறிஸ்தவர் எல்லாரிலும் எளியர்; இது எவரும் நம்மைக் குறித்துச் சொல்லும் வசைச்சொல். இதனை ரத்து செய்யும் பொருட்டு நமது வாலிபரைப் பல கல்வித் துறைகளிலும் பயிற்றுவித்து, நற்பதவிக்குக் கொண்டுவர வேண்டுமென்பதே இதன் நோக்கம். நமது வாலிபர் நமது சபைகளைத் தாங்கி நிற்கவேண்டிய தூண்கள். அவர்களை ஸ்திரப்படுத்துவது நம்மில் பெரியோராயிருப்பவர் கடன். இதற்கென்று சேர்க்கப்படும் சந்தா ஒவ்வொருவர் சம்பாத்தியத்திலும் மாதம் ரூபாய் ஒன்றுக்கு 1 பை தான். இவ்விதமாக இப்பொழுது நமது மிசியோனைச் சேர்ந்த 12 வட்டங்களிலிருந்து கிரமமாகத் தொகை வருகிறது. தற்சமயம் ஒருவரை உயர்தரக் கல்வியிலும், சிலரைக் கைத்தொழில் பயிற்சியிலும் ஆதரிக்க இச்சங்கம் ஆயத்தமாயிருக்கிறது. படிக்க விரும்புவோர் தங்கள் மனுக்களை அச்சுப் பாரங்களில் எழுதியனுப்பவேண்டும். மனுப்பாரங்கள் எல்லாக் கிளைச்சங்கக் காரியதரிசிகளுக்கும், சங்கமில்லாத இடத்தில் சுதேச குருமார், பிரசங்கிமார்களுக்கும் அனுப்பப்பட்டிருக்கின்றன. மனுக்கள் அந்தந்த ஊர் கமிட்டி மூலமாய்ப் பொதுக் காரியதரிசிக்கு அனுப்பப்படவேண்டும். கமிட்டி இல்லாத இடங்களில், கடிதங்கள் மூலமாகக் கேட்டுக்கொள்ளப்பட்டபடி, அங்கங்குள்ள சுதேச குருக்கள் ஒரு கமிட்டி ஏற்படுத்திக் காரியாதிகளை ஒழுங்குபடுத்தக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

Bible Union Hall,<br>PURASAWALKAM, MADRAS.<br>10 — 3 — 09.

தங்கள் விதேயன்,<br>J. D. ஆசீர்வாதம்.<br>*General Secretary. L. S. U. A.*

## NOTICE

Dear Sir,

Kindly permit me to intimate to the Missionary brethren of India, Burma, and Ceylon, through your valuable paper, that it was the wish of the late Dr. Husband that his Missionary Directory continue to be issued from our Press here as usual. For fourteen years it has been my privilege to labour along with Dr. Husband, and to assist in the preparation of every edition of his Directory, and in taking up the work which he has just laid down, I do so with the knowledge of how much the compiler depends on the co-operation of Mission secretaries and others. May I venture to hope therefore, that the valuable assistance so willingly rendered to Dr. Husband in the past be continued to the writer who in turn will do his best to continue to make the Directory a book that no Missionary in the country can very well afford to be without.

Yours faithfully,

JHN. INGLIS. Manager.

C. B. H. *Rajputana Mission Press, Ajmer.*

## Change of address.

*The undersigned hereby notifies that his future address will be "Rev. H. Matthes, 350 Däto Kramot Road, Penang".*

H. MATTHES.

---

## மரண அறிக்கைகள்.

இரங்கூன் லுத்தரன் சபையில் வெகுகாலமாய் மூப்பராயிருந்தவரும் Bengal Bank இல் Head clerk வேலைபார்த்து வந்தவருமாகிய எனது அருமைத் தந்தை அ. ஞா. சாமிபிள்ளையவர்கள் பிப்ரவரி மீ 26-ம் உ திடீரென வியாதிப்பட்டு 28-ம் உ காலை 9 மணிக்குக் கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரையடைந்தார். அவர் சடலம் அன்று சாயந்திரம் 5 மணிக்கு எடுப்பிக்கப்பட்டு லுத்தரன் கோவிலில் துக்க ஆராதனை நடத்தியபின் பசுமந்தான் Protestants கல்லறையில் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் நல்லடக்கம் செய்யப்பட்டது.

வயது 49.

RANGOON, 2-3-09.
Kemendine,
*Mohr. Bros. Rice Mill.*

தங்கள்,
S. ஆரோன்.

---

கிறிஸ்து எனக்குச் சீவன், சாவு எனக்கு ஆதாயம்.

எங்கள் அருமைத் தகப்பனார் பள்ளியேறி பாக்கியம் உபாத்தியாயர் 26 வருஷக் காலமாக நமது மிசியோனில் வேலை பார்த்து, சுகவீனத்தின் பொருட்டு பென்ஷன் பெற்று வருகையில், வழியில் கிடந்த மூங்கில் முள் காலில் தைத்து சிலயோட, சிகிச்சை செய்தும் குணமாகாமல் சுரம் கண்டு, நித்திய சீவனின் சந்தோஷமுள்ளவராய்த் தமது நோவை பொறுமையாய்ச் சகித்து நல் நிதானத்துடன் ஜனவரி மீ 4 உ மாலை 7 மணிக்குத் தமது பரம எசமானின் இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தார். மறு நாள் அவர்களது தேகம் சங். D. தாவீது ஐயரவர்களால் சகல கிறிஸ்தவ மேரையுடன் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 68.

தாழ்மையும் கீழ்ப்படிதலுமுள்ள குமாரர்,

பள்ளியேறி,
தஞ்சாவூர்.

ஆபிரகாம்,
சாலோமோன்.

